சுரிகைகொண்டுசெந்நாவினைத்துணித்திடத்துன்பவாரிதியாழ்ந்தோர்
வரியுளிக்கணமுரன்றெழுநந்தனவனத்துவாய்ப்புனருழ்த்தோ
ரெரிமடுத்தசெம்புருக்குவாய்பகுந்தெடுத்தெடுத்துவார்த்தடப்பட்டோர்
குரவனில்வயிற்கண்படைகொண்டுதம்பலமுமிழ்கொடியோர்கள். ௪௧௦

சென்னிகீழுறநட்டொறுத்தலுந்தெருமந்துடற்றுளைதோறு
மன்னிநீள்புழுக்கிளைப்பமென்றசைகொடிபருந்துணமறுகுற்றோர்
துன்னுதீவினைப்புறமதத்திருந்தெமைத்துகளிலெம்மடியாரை
நன்னர்நீறுகண்மணிகளைநகையுணர்குரவனைப்பழித்தோர்கள். ௪௧௧

வெடித்தமூளைகடெறித்தெழவுருகியவெண்ணிணம்வழிந்தோடத்
துடித்துமெய்யெலாநீறவெந்தழற்கொடுந்தொன்னரகிடைத்தோய்ந்தோர்
கெடுத்தவைம்பொறிக்குரவனிட்டிகைசிலகெடுத்தவரடியாரில்
லடுத்துமென்றுகில்கண்மணிகவர்ந்தவரென்னுமப்பழியோரே. ௪௧௨

வேறுவேறுறுப்பனைத்தும்வெள்வாளினுல்வெருக்கொளவரிந்தந்தக்
கூறுமீளவுமுருவுசெய்தங்கியிற்குழைக்கமிக்கினைகின்றோர்
மாறுகாஞ்சனம்வலிதினுய்த்தளித்துநம்படப்பையின்வளர்வாழைத்
தாறுபாய்கனிகவர்ந்துயர்வேதியர்தங்களைநுகர்வித்தோர். ௪௧௩

கறைமடுத்திடித்தெடுத்துநெய்த்தோருகக்கையினுற்பிண்டித்து
நிறையின்வங்கமோடடைத்துவாய்மூடிவெந்நெருப்பிடக்கொதிக்கின்றோர்
முறைதெரிந்ததங்கடும்பெமக்களித்தநீர்முதிர்செழும்பழனத்தைப்
பெறவிழைந்துபல்கான்முயன்றரசராலும்மையும்பேதுற்றோர். ௪௧௪

வார்ந்தவாளரம்பிறழ்பலிற்றடிகுடர்மருங்குநைந்துகப்பூட்டி
யீர்ந்துசெங்கனற்கொதிக்குநெய்யிடக்குளித்தெழுந்தெழுந்தழிகின்றோர்
சார்ந்தவேதியர்க்கன்பினுற்பசுத்திரட்டானமுய்த்திடுமேல்வை
யார்ந்ததம்பசுநிரைவயிற்சேர்ந்தநம்மானையுமீட்டங்கீந்தோர். ௪௧௫

நெடியவச்சிரமதலையைப்பற்றிநீள்கனற்கொழுந்தடமாய்வோர்
கொடியணிந்தெயின்மருங்குடுத்தோங்குநங்கோயிலினடஞ்செய்யுந்
துடியிடைப்பணைத்தோளியர்தமைநலந்துய்ப்பவிற்செறித்திட்டு
விடுதல்செய்கலாதரசராலும்மையும்வேதனைக்கடலாழ்ந்தோர். ௪௧௬

வாயிலொன்பதுமுருக்கியதமனியம்வாக்கிவன்னியினிட்டுக்
காயும்வைநுதிக்கருவிகடசைநிறுத்திருத்துறக்கரைகின்றோர்
தூயமாழையினரிறபப்புரிந்தநந்தூமலர்த்தொடைத்தோளி
னேயுமுப்புரிநூல்கவர்ந்தீத்தவர்புனைந்தவரிவர்மாதோ. ௪௧௭

ஓறுக்கும்வெவ்வழனெய்யின்வீழ்த்தழுந்தவாப்புறப்பனைத்தினுங்கோத்திட்
டிறுக்கிநாசிகண்காதினிற்சலாகைகளேற்றநொந்துயிர்ப்பில்லா
ரிறப்பமெய்வருந்தியபொழுதெம்முடைச்சினகரத்தெலுமிச்ச
நிறப்பழஞ்சுடர்விளக்குநெய்கவர்ந்துதோய்த்தொத்திநன்னெறிநீத்தோர்

காதநான்குறக்கண்கணுவளர்ந்துபோய்க்கழுகுநாய்நரிவெளவ
வாதகாதெனவுயங்கியசீத்தையாராயைத்தெமைப்போற்றப்
போதுமேல்வைமெய்வளியெழீஇயொருசுடர்பொன்றவன்னதுகாணு
ரோதுமவ்விளக்கவிந்தமைகண்டுரையாதவரிவர்மன்னே. ௪௧௮

என்றுபின்னுமங்கினைபவர்தமையெலாமிவரிவரெனக்கூறி
முன்றவிங்கிவராளற்றினின்றேறவுமதிக்கினீயிர்கள்வல்லே
சென்றுமுற்றிவர்தமைக்குறித்தத்திருக்காஞ்சிமாநகர்வைப்பி
னென்றுமன்பினம்பூசனையுஞற்றுமினென்றனருமைபாகர். சஉ0

அருளும்வாய்மொழிகேட்டலுமுவ்கையினருந்தவன்முதலானோர்
கருணைநாயகன்றிருவடிபணிந்தனர்விடைகொடுகடிதெய்தி
முருகுநாறியகாஞ்சியினேகம்பமுதல்வனைவழிபட்டுப்
பெருகுதீர்த்தமாயொழுகியகம்பையின்பெருமணிக்கரைப்பாங்கர். சஉக

தேவநாதனென்றோங்கியபெயரினுற்சிவக்குறிநிறீஇப்போற்றப்
பாவகாரியரனைவரும்பருவருகும்பியின்படர்நோய்தீர்ந்
தோவில்காஞ்சியினுற்பவித்தேகம்பத்தும்பனையுறப்போற்றி
நாவலோர்புகழ்கயிலையிற்சிவகணநாதராய்ப்பயில்வுற்றார். சஉஉ

மற்றொர்காலையினத்தகுகௌதமமாதவன்கயிலாய
முற்றுநாதரைத்தொழுபவன்மற்றிஃதுரைக்குவானகைகாட்டிப்
பற்றலார்புரம்பொடித்தவகாஞ்சியிற்பயிற்றுதீவினையாறு
முற்றுமோதினைபுண்ணியப்பயனையுமொழிகெனவருள்செய்வார். சஉங

தடுத்தவைம்பொறியுறுவனேகேண்மதிசார்ந்துநீரெமக்கன்பிற்
றொடுத்தபூசனைப்பேற்றினுற்கும்பியிற்றுயருழந்தவர்யாரு
மடுத்துநம்வயினிதோகணநாதராயமன்றனர்காணென்னு
மடுத்தகாதலின்மொழிந்துமற்றெத்திறப்பயன்களும்வகுத்திட்டார். [சஉச]

வேறு.

இன்னபல்பெருமைசான்றவெழில்குலாங்காஞ்சிதன்னை
முன்னொருகற்பத்தும்பருலகில்வாழ்முறைதேர்தச்சன்
கன்னியோர்பாகத்தண்ணல்கருணையினேவப்பெற்றுத்
தன்னுறுதொழின்மைமுற்றத்தனிநகராக்கப்புக்கு. சஉரு

வேறு.

கிழக்குவாய்தறனின்மாயாபுரங்கேழ்கிளரும்பொன்னகரை
யிழிக்குந்தெனுதுவாய்தலிடையிராசராசபுரமேல்பாற்
செழிக்கும்வாய்தறனில்வளங்கள்செறிமார்த்தாண்டபுரம்பவநோ
யழிக்கும்வடாதுவாய்தலரிகண்டபுரமும்வகுத்தமைத்து. சஉசு

நாலாயிரத்தைத்தலைப்பெயுநாற்பதினாயிரவாய்தல்களியக்கி
நூலாலொழுக்கிக்கவின்கொழிக்குநூறாயிரவீதிகள்போக்கி
மேலாய்விளங்குநாற்சாதிமுதலாங்குடிவெவ்வேறிருவிச்
சாலாவினைதீர்சிவபுரப்பேர்தழங்கநுவணகர்செய்தான். சஉஎ

அங்கணரியேற்றணையின்மலையணங்கோடினிதுவீற்றிருந்து
செங்கணரிநாண்மலர்க்கடவுடேவர்முதலோர்பணிகேட்பத்
திங்கண்மிலைத்தபொலஞ்சடிலத்தேவநாதர்தனிவேந்தாய்ப்
பொங்குகருணையூற்றெடுப்பப்புவனமுழுதும்புரந்திருந்தார். சஉஅ

உலகமுழுதுந்தலையளிசெய்தோம்பும்பதத்தினயன்செழுந்தாண்
மலர்கள்பணிந்துவேண்டுதலுமல்லன்மிகும்பங்குனிச்சாறு
குலவநடவியுத்திரத்திற்குன்றத்துயிர்த்தபெண்ணமுதை
யலகிலுயிருங்களிதூங்கமன்றல்வினையாற்றினர்வாழ்ந்தார். சஉகூ

கலிநிலைத்துறை.

பின்னரொவ்வொருகாலத்துப்பிஞ்ஞகனருளா
லன்னமூர்பவனரிமகவானிவர்தாமு
மின்னலோப்புமக்காஞ்சியையிறைமைபூண்டளித்தார்
மன்னரெண்ணிலர்முறைப்படியாண்டவர்மாதோ. சகூo

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

முருகவேளெங்கைப்புத்தேண்மொய்கதிர்மயமீன்ற
திருநுதலிவர்களல்லாற்றேங்கமழ்தனிமாமூலத்
தொருவனுர்மகிழ்ந்துவைகுமுலப்பருங்காஞ்சிமூதூர்ப்
பெருமையைமுழுதும்யாரேயுரைத்திடும்பெற்றிவல்லார். சகூக

கலிவிருத்தம்.

வாழிநான்மறைவாழியசைவநூல்
வாழிமன்னவர்செங்கோன்மனுநெறி
வாழிநீண்முகில்வையகம்யாவையும்
வாழிவாழிவளநகர்க்காஞ்சியே. சகூஉ

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அஃறிணையுமுயர்திணையுமெனப்பகுத்தவுயிர்கடொறுமவையேயாகிச்
சிஃறொழிலுஞ்செய்யாதுசெய்துவினைத்திறனருத்திச்சிறியேனெஞ்சக்
கஃறனையுங்கரைத்துருக்கித்தடுத்தாண்டகச்சிமேயகம்பமேய
பஃறலையபாப்பரசினங்கதத்தான்குஞ்சிதத்தாள்பரசிவாழ்வாம். சகூகூ

இருபத்தெண்டளிப்படலம்முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - உகக௦.

---

இரண்டாங்காண்டம்முற்றியது.

---

ஆகக்காண்டமிரண்டுக்குத் திருவிருத்தம் - சஅருக.

---

காஞ்சிப்புராணம்முற்றுப்பெற்றது.

---

மெய்கண்டதேவர்திருவடிவாழ்க.

கச்சியப்பமுனிவர்திருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

---